ஓம்
பரப்ரம்மணேநம:

# முடிவுரைச் சூருவளி.

உலகில் ஒன்றுக்கொன்றுமாருக ஒரு பொருளுக்கு இலக்கணம் கூறுவார்களே யாயின் அதன் உண்மை தருக்கஞ் செய்தே தீர்மானிக்கப்படவேண்டும். இது ஆதிமுத லின்றளவும் யாவர்க்கும் அநுபவமா யிருக்கின்றது. அங்ஙனமின்றி ஒருவர் சொல்வதையே நம்ப வேண்டுமெனின், உண்மையைக் கூறிடினும் நம்புதல் வேண்டும், பொய்மையைக்கூறிடினும் நம்புதல்வேண்டும். அந்நம்பிக்கை குருட்டு நம்பிக்கையே யன்றி நியாயமான நம்பிக்கை யன்று. எந்தவகுப்பினர் குருட்டு நம்பிக்கை யுடையவரோ அவர் சித்தாந்தமும் குருட்டுச் சித்தாந்தமாகத்தா னிருக்கும். திருஷ்டாந்தமாக ஐரோப்பியர், அமெரிக்கர் இலவுகிக விஷயத்தில் குருட்டுச் சித்தாந்தத்தை யொழித்து, ஒவ்வொரு துறையிலும் புகுந்து உண்மை யாதெனத் தருக்கித்து உண்மையை யுணர்ந்தனராகலின், அவர் உலகி லெல்லாரினும் முதன்மைபெற்று மதிக்கப்படுகின்றனர். அவர் காரியங்களும் மிகச் சிறந்து விளங்குகின்றன. மற்றவர் அங்ஙனமின்மையான், அவர் காரியங்கள் சிறந்து விளங்காமல் இகழப்படுகின்றன. இதனுல் எவ்விஷயமும் தருக்கித்தே தீர்மானிக்கப் படவேண்டுமென்பது துணிபாம். யார் தருக்கத்துக்கு வரோமெனக் கூறுகின்றனரோ, அவர் சித்தாந்தம் தருக்கத்துக் கிணங்காச் சித்தாந்தமெனக் கொள்ளப்படும். வாதவிஷயமாக இருவகுப்பினர் வாதம்புரியுங்கால் தோல்வியடைந்தவரும், அவரைச் சார்ந்தோரும் "பின்னும் பின்னும் வாதஞ்செய்யின் தோல்வி பின்னும் பின்னும் அதிகமாம்" எனக்கருதி வாதத்தை நிறுத்திவிடப் பெறுமுயற்சி செய்வதுமுண்டு. அவர்கள் அவ்வாறு செய்ய முயன்றாலும் பொதுத்தன்மையுள்ளார் வாதத்தை நிறுத்தாமல் நடக்கச் செய்தல்வேண்டும். நிறுத்துவதால் உலகில் தப்புக் கொள்கைகள் பரவுகின்றன. பரவுவதால் (அவர்கள் கொள்கைக்கு நியாயபல மில்லாமையால்) வாத சமயத்தில் எங்ஙனமாயினும் தம் கொள்கையை ஸ்தாபிக்கவேண்டித் தூஷணஸ்திரங்களைப் பொழிகின்றனர். எந்த விஷயத்தைப்பற்றியேனும் எவ்வளவு நீடித்த காலமேனும் வாதம் புரிவது நன்றே. எந்த விஷயம் எவ்வளவு நீடித்த காலம் வாதஞ் செய்யப்படுகின்றதோ, அவ்வளவுக்கும் அதனுண்மை விளக்கமாகும். ஆதலால் நடுவுநிலைமையுள்ளபுத்திமான்கள் வெகுநாள்வரையில்வாதம் நடக்கும்படி முயற்சி செய்யவேண்டியது. இடையில் நிறுத்தும்படியாகவாவது, வாதமே செய்யப்படாதென்ருகவாவது சொல்வது சரியன்று. இது நிற்க, இரண்டு வருஷங்களுக்கு முன்னர் ப்ரம்மவித்தியா ஞானமிர்தமாகிய இரு பத்திரிகைக்கும் வேதாந்த சித்தாந்த விஷய

மாக நடந்த வாதத்தில் ஞானாமிர்த பத்திராதிபர் சோர்ந்துபோன சமயமறிந்து, ம-௱-௱-ஸ்ரீ சோமசுந்தரநாயக ரென்பவர் அவர்க்காக நாகைநீலலோசனியில் சில எழுதிக்கொண்டே வந்தார். அதற்கு மேலுமேலும் ஒன்றுக்குப் பத்தாகக் கண்டனைகள் புறப்பட்டன. அக்கண்டனைக்குப் பதில் சொல்லாமல் ஷை சோமசுந்தரநாயகருஞ் சோர்ந்துபோனார். இப்படிப்பட்ட சோர்வுச்சமயத்தில் அதாவது 1893௵ ஜனவரி௴ 28-ந்தேதியில் நாகைநீலலோசனிப் பத்திரிகை பதினாறுவது பக்கத்தில் "முடிவுரை" யென ஓர் சிறு விஷயம் வந்தது. அதில் சேதுபதி மகாராஜா அவர்கள் ஷை சோமசுந்தர நாயகரை நோக்கி: நீர் வாதஞ்செய்வதை நிறுத்திச் சும்மாவிருக்கச்சொன்னதா யெழுதியிருந்தது. அது யார் எழுதியதென நோக்குமிடத்து, அதன் கீழிட்ட கையெழுத்தினால் ஷை சோ. நாயகரே எழுதியனுப்பியதாய்த் தெரியவந்தது. மகாராஜா அவர்கள் சொன்னாரென்று சொல்லியதோடு நில்லாமல், அதனைத் தாம் மனப்பூர்வமாய் அங்கீகரித்ததாகவுஞ் சொல்லுகிறார். அதுமாத்திரமா, "அன்று முதல் பிரம வித்தியாவை எதிரிட்டு மறுத்தற்றொழிலை மறந்தோம்" என்றுஞ் சொல்லியிருக்கிறார். இவ்வாறு இவர் சொல்லுகின்றனரே யன்றி மகாராஜா அவர்களாவது அவர் உத்தரவுப்படி அவர் காரியதரிசியாவது சொல்லுகின்றாரில்லை. பதில்சொல்லமுடியாது சோர்ந்து போயிருக்கும் சமயத்தில மேற்படி கடிதம் வெளிப்பட்டதால் சோ. நாயகர் சொல்லுவதுக்குச் சந்தேகமாகவே யிருக்கின்றது. சோ. நாயகர் சொல்லுவது போல மகாராஜா அவர்களே சொன்னதாய் வைத்துக்கொள்வோம். சோ. நாயகர் எப்படிச் சம்மதிக்கலாம்? எதிர்ப்பக்ஷத்தார் விடாது வாதப்போர் புரியும்போது இவர் எப்படிச் சும்மாவிருக்கலாம்? இவர் சும்மாவிருந்தால் தோல்வி யார்பக்ஷம்? வெற்றியார்பக்ஷம்? மகாராஜா அவர்கள் வாதஞ் செய்யவேண்டாமென்றமையால் வெற்றித் தம் பக்ஷந்தானென்னலாமோ? அப்படிச் சொன்னால் எதிர்ப்பக்ஷத்தார் ஒத்துக்கொள்வார்களா? மத்தியஸ்தர்தான் இவர்பக்ஷம் வெற்றியென்று சொல்ல எப்படி வாய் திறப்பார்கள்? சென்னைத் திருவல்லிக்கேணியில் ஞாயிற்றுக்கிழமைகளில் பந்தயங் கட்டி இருவ ரிருவராகக் குஸ்தி செய்வது வழக்கம். அவ்வாறு பந்தயங் கட்டிக் குஸ்தி செய்து கொண்டே யிருக்குஞ்சமயத்தில், இருவரில் ஒருவன், குஸ்திசெய்யாமல் நின்று: "என்னை மகாராஜா அவர்கள் குஸ்தி செய்யவேண்டாமென்று சொன்னார்; அதனால் குஸ்தி செய்யமாட்டேன்; மகாராஜாவி னுத்தரவின்பேரில் குஸ்தி செய்வதை நிறுத்திவிட்டேனாதலால், நானே னே வெற்றியடைந்தவனாவேன்; பந்தயத்தை யென்னிடந்தான் கொடுக்கவேண்டும்; வெற்றிப்பட்டத்தையும் எனக்கேதான் அளிக்கவேண்டு மென்றால், அப்படி எதிர்ப்பக்ஷத்தான் சம்மதிப்பானா? எதிர்ப்பக்ஷத்தான் சம்மதித்தாலும் மத்தியஸ்தர் சம்மதிப்பார்களா? அங்ஙனமே மகாராஜா அவர்கள் உத்தரவின்படி

இவர் வாதஞ் செய்யாமற் போனதால் இவர்க்கு வெற்றிவருமா? மகாராஜாவின் தாக்ஷிணியத்துக்கஞ்சிச் சிலர் இவர் வெற்றி பெற்றாரெனச் சொல்லினும், இவர்க்கு வெற்றிப் பட்டத்தை யளித்திடினும் அது வெற்றியும் வெற்றிப்பட்டமு மாமா? ஆகாதபோது இவர் தோற்றவர்தானே. வாதப்போர்செய்து நிச்சயமாய் வெற்றி பெறுவோமென்னுந் தயிரிய மிருக்குமானால், மகாராஜா அவர்களை நோக்கி: "இடையி லெப்படி வாதப்போரை நிறுத்தலாம்? நிறுத்தினல் வாதத்திற் பலமில்லாமையினல் போக்குக் காட்டித் தப்பித்துக் கொண்டு ஓட வழிபார்க்கிறானென்று சொல்வார்களே; நான்றா னிறுத்தினாலும் எதிரிகள் நிறுத்துவார்களா? எதிரிகள் வெகுதூரம் மேலே யேறிப் போய்விட்டார்களே; ஆதலால் நான் சும்மாவிருப்பது நியாய மல்லவே, சும்மாவிருந்தால் தோல்வியடைந்தேனெனப் பலரா லிகழப்படுவேனே" என்று மகாராஜா அவர்களுக்குச் சொல்லி, அவருத்தரவு பெற்றுக்கொண்டு வாதமுடிகிறவரையில் வாதப்போர் செய்யவேண்டாமா? மகாராஜா அவர்கள் வாதஞ் செய்யவேண்டா மென்று எப்போது சொல்வாரோவென் றெதிர்பார்த்து, அவர் சொன்னாரென்றபோது, அதைப் பத்திரிகையி லெழுதிவிடுவது வெற்றியாமா? அது தோல்வியெனற்கு ஆக்ஷேபமென்னை? மகாராஜா அவர்கள் தான் எப்படிச் சொல்லலாம்? உலகில் நடக்கும் வாதங்களெல்லாம் ராஜாக்கள் சொல்லிவிட்டால் நின்றுபோமா? இவர் மகாராஜாவுக்கு அடங்கி வாதப்போரை நிறுத்தினல் மறறப்பேரும் அடங்கித் தமது நியாயத்தை விட்டுவிடுவார்களா? உலகில எத்தனையோ விஷயங்களில் பலர் பலவித மாறுபா டடைகின்றார்கள்; அவர்களெல்லாம் இராமநாதபுரம் மகாராஜா அவர்கள் சொற்படி கேட்டு அடங்கித் தங்களுக்குத் தோன்றிய நியாயங்களை வெளியிற் சொலலாமல் மறைக்கிறார்களா? ராஜாவுக் கடங்கியவர்கள் சொல்ல அஞ்சினாலும் மற்றவர் அஞ்சுவார்களா? பூகோளம், ககோள முதலிய பல சாஸ்திரங்களைப்பற்றி ஐரோப்பியர் வாதஞ் செய்கின்றார்களே; அவர்களெல்லாம் ராஜாக்களுக்கு அஞ்சி வாதத்தை நிறுத்துகின்றார்களா? பைபிலுக்கு விரோதமாக எந்தச் சாஸ்திரமும் பேசப்படாவெனச் சில நூறு வருஷங்கட்குமுன் ஐரோப்பாகண்டத்தில் சட்டமிருந்தாலும் இப்போது அந்தக் கொடுமைகளெல்லாம் ஒழிந்துபோயினவே. இந்தக்காலம் அந்தக்கால மல்லவே. சாஸ்திரத்திற் றோன்றிய சந்தேகங்களை வாதத்தினல் நிவர்த்தி செய்துகொள்ள வேண்டுமே யன்றி, மூடிவைத்தால் நிவர்த்தியாமா? ஒரு பொருளுக்கு மாறுபட்ட இரு இலக்கணம் இருவர் கூறினல், அதனுண்மை புலப்படுவ தெங்ஙனம்? வாதத்தா லன்றோ? வாதஞ் செய்யப்படாதென்றால், உண்மை மறைந்துதானே யிருக்கும். ஐரோப்பியர், அமெரிக்கர்: தமக்குத் தோன்றிய மாறுபாட்டினை வாதமுகத்தால் தீர்த்துக் கொள்ளுகின்றமையினாற்றானே, பதார்த்த சோதனையில் மற்றத் தேசத்தாரைவிட அவர்

கள் தலைமையி னிற்கின்றார்கள். இராமநாதபுரம் மஹாராஜா அவர்கள்
இங்கிலீஷ் படித்துத் தேறித் தற்காலக் கல்விச் சீர்திருத்தங்களையும்,
ஐரோப்பிய அமெரிக்காது விவேகங்களையும், அத்தேசங்களினது
நன்னிலைமையினையும் நன்குணர்ந் திருக்கின்றா ராகலின், அப்படிப்
பட்ட புத்திமான், இவரை வாதஞ் செய்யவேண்டாமென்று எவ்வாறு
சொல்லக்கூடும்? திருட்டாந்தமாக நீரினது நிறம் கறுப்பென ஒரு
வனும், வெண்மையென ஒருவனும் கூறி, அதுவிஷயமாக இருவரும்
வாதஞ்செய்தார்களென்று வைத்துக்கொள்வோம். அவரில் ஒருவனை
நோக்கி: "நீ வாதஞ் செய்யவேண்டா" மென்று சொல்லுவது நியாய
மாமா? சொன்னால் உண்மை வெளியாவது யாங்ஙனம்? இவர் கூறிய
வாறு மகாராஜா அவர்கள் சொன்னாரென்றாலும் அதன் கருத்து
வேறாக விருக்கலாம். இந்தச் சோமசுந்தர நாயகர் நியாயநெறி பிறழ்
ந்து கடுஞ்சொல்லைப் பிரயோகித்துத் தூஷணைசெய்கிறவ ராதலாலும்,
வைஷ்ணவர்களுக்கு எழுதிக்கொடுத்த பத்திரத்தில் தூஷணை செய்த
தாய்த் தாமே யொப்புக்கொண் டிருப்பதாலும், பிறகும் தூஷணையை
விடாமலிருப்பதாலும், தூஷணையின்றி வாதஞ்செய்ய அவராலாகா
மையினாலும் அதுபற்றி, "நீர் வாதஞ்செய்யவேண்டா"மென வொரு
வேளை சொல்லியிருந்தா விருக்கலாம். மற்றப்படித் தூஷணையின்றி
வாதஞ்செய்வோரை நோக்கி: அவ்வாறு சொல்வாரென எமக்குத்
தோற்ற வில்லை. இதைவிட்டுத் தம்மை வாதஞ் செய்ய வேண்டா
மென்று உத்தரவு செய்ததாய் மாத்திரம் சொல்லுகிறார். இவர் தருக்க
நெறி தவறாது வாதஞ் செய்வதாயிருந்து, அதன்பேரில் வாதஞ்செய்ய
வேண்டாமென்று கட்டளை செய்திருப்பாராயின், அது குற்றமாகவே
முடியும். பத்தியந் தவறி மருந்து சாப்பிடுகிறவனை நோக்கி: "நீ மரு
ந்து சாப்பிடவேண்டா" மென வைத்தியன் சொல்வானேல், அவன்
என்ன கருத்துக்கொண்டுசொன்னானென ஆலோசிக்கவேண்டும். அது
போல மகாராஜா அவர்கள் இவரைவாதஞ் செய்யவேண்டாம் என்
றால், அவர் என்ன கருத்துக்கொண்டு சொன்னாரென் றுணரவேண்
டும். வாதஞ்செய்ய வேண்டாமென்று தான் மகாராஜா அவர்கள் இவ
ருக்குக் கட்டளையிட்டாரே. 'அந்தக்கட்டளை எந்த அத்வைதிக
ளுடனுமா? பிரமவித்யாவுடனும் அப்பத்திராதிபருடனுமா? எந்த
அத்வைதிகளுடனு மென்றுதான் சொல்லி யிருக்கவேண்டும். ஏனெ
னின் அதுவரையில் அனேக அத்வைதிகள் இவருடனும் சபாபதி
நாவலர் முதலியவர்களுடனும் வாதஞ்செய்திருப்பதாலென்க. ப்ரம்ம
வித்யாவினுடனும் அப்பத்திராதிப ருடனுமாத்திரம் வாதஞ் செய்ய
வேண்டாமென்று சொல்லியிருப்பாராயின் 'சும்மாயிருப்பதுவேசுகம்'
என மகாராஜா அவர்கள் இவருக்குச் சொல்லவேண்டுவ தில்லை;
மற்றப்பேருடன் வாதஞ் செய்தல் சும்மாவிருத்த லல்ல வாதலா லெ
ன்க. இவ்வாறு மகாராஜா அவர்கள் இவர்க்குச் சற்புத்தி புகன்றது
நந்தன ௵ புரட்டாசிமீ ௨௧௳. இதற்குப் பின் ஒன்பது மாசத்திற்

கெல்லாம் மகாராஜா அவர்கள் போதித்த நற்புத்தியை மறந்துவிட்டார். அதனால் அடுத்த விஜயஸ்ரீ ஆனிமீ" ௳௦௨ தூத்துக்குடிக்குச்சென்று 'சும்மாவிருப்பதுவே சுகம்' என்ற நற்போதனையை அவமதித்துப்பின்னும் அத்வைதிகளுடன்வாதஞ்செய்ய எழுந்து, ஆங்குள்ள சபை ஒன்றுக்கு "மாயாவாதி மதக்குழப்பம்" எனச் சிறுபத்திரம் எழுதிக்கொடுத்துக் கலகத்தை விளைவித்தார். மகாராஜா அவர்கள்:

"சும்மாவிருக்கச்சுகஞ்சுகமென்றுசுருதியெல்லாம்
அம்மாநிரந்தரஞ்சொல்லவுங்கேட்டுமறிவின்றியே
பெம்மான்மௌனிமொழியையுந்தப்பியென்பேதைமையால்
வெம்மாயக்காட்டிலலைந்தேனந்தோவென்விதிவசமே"

என்ற தாயுமானவர் பாடலின் வேதாந்தக் கருத்தை யிவருக் குபதேசித்தனர். இவர் அவ்வுபதேச நன்மொழியை மதியாது தமது இயற்கைக் குணத்தை காட்டினார். மகாராஜா அவர்கள் சொல்லை இவ்வாறு மதித்த இவர்: ஷை பத்திரிகையில் "மகாராஜா அவர்களது அத்தியாச்சரியகரமான சுபோதம் மனோரஞ்சிதமாயும், உசிதமாயுமிருந்தது. அதனை மனப்பூர்வமாக அங்கீகரித்த யாம்" என்கிறார். இதனால் மகாராஜா அவர்களது சொல் 'அத்தியாச்சரியகரமான' தென்று சொல்லியதும், 'சுபோதம்' என்று சொல்லியதும், மனோரஞ்சிதம்' என்று சொல்லியதும், 'உசிதமாயிருந்தது' என்று சொல்லியதும், 'அதனை அங்கீகரித்த யாம்' என்று சொல்லியதும், அதிலும் 'மனப்பூர்வமாய் அங்கீகரித்த யாம்' என்று சொல்லியதும் சமயத்துக்கேற்றவாறு சொல்லியனவா யிருக்கின்றனவே யன்றி மற்றப்படியன்றே. முன்பு இவ்விதமா யெழுதிவிட்டு ஒன்பது மாதத்திற் கெல்லாம் மாறுவது நியாயமாமா? மகாராஜா அவர்கள் சொல்லை அவமதித்துத்தான் பத்திரம் எழுதிக்கொடுத்தாரே. அதற்கு ப்ரம்மவித்யாவில் மறுப்புவந்து 96 பக்கங்கொண்ட பெரிய புத்தகமாகவும் வெளியாயிற்றே. அதற் கேன் சமாதானம் எழுதவில்லை? சமாதானம் எழுதாமைக்கு மகாராஜா அவர்கள் சற்போதத்தை யச்சமயத்தில் உபயோகப்படுத்திக்கொண்டனரோ! மகாராஜா அவர்கள் வாதஞ்செய்யாமல் சும்மாவிருக்கச் சொன்னமையாற்றான் பதிலெழுதாமலிருக்கிறாரோ! இல்லாவிடில் எழுதிவிடுவாரென இவருக்குச்சார்பாய் நீலலோசனியிலும் விவேகதிவாகரனிலும் சிலரெழுதவும் எழுதிவிட்டார்கள். மகாராஜா அவர்கள் வாதஞ்செய்யாது சும்மாவிருக்கச் சொன்னாரென்று சொன்னதும், அதனை மனப்பூர்வமா யங்கீகரித்து அதன்படி யொழுகுகின்றேனெனக் கூறியதும், பிறகு அதைத் தவிர்த்து வாதஞ்செயததும், அதன்பேரில் வந்த கண்டனைக்குப் பதிலெழுதாமல் (மகாராஜா அவர்கள் வாதஞ்செய்ய வேண்டாமென்றதால்) சும்மாவிருக்கின்றேனெனச் சொன்னதும் வெகு வீரியமும் மிகு சத்தியமுமாம்.

இவர் மற்றொன்று கூறுகின்றார். அஃது "வாதவழியினின்றும்
விலகிச் சாத்திரரூபமாக விஷயங்களை யெழுதி வெளிப்படுத்துவது
உசிதமெனவும் எம்மைப்பார்த்துத் தெரிவித்தார்கள்" என்பது. இது
உண்மையானால் தூத்துக்குடிக்குப் பத்திரமெழுதிக்கொடுத்து நாகை
நீலலோசனியிலும அதைப் பிரசுரப்படுத்த வேண்டிய ஆவசியகமில்
லையே. 'பிரமவித்தியர்வை யெதிரிட்டு மறுத்தற்றொழிலை மறந்தோம்'
என் றிவர் கூறிவிட்டதனால் பிரம்மவித்தியாவில் ஷைபத்திரத்துக்குக்
கண்டனையாய்வந்த " அத்வைததூஷணபரிகார " த்துக்கும் பதில்
எழுதவேண்டிய ஆவசியக மில்லை யென விருந்தன ராக்கும். இந்த
யுதவேசித்தே 'ப்ரம்மவித்தியாவை யெதிரிட்டு மறுத்தற்றொழிலை மற
ந்தொழிந்தோம்' என்று கூறினாரென னன்றாய் விளங்குகின்றது. தமது
கக்ஷியை மறுக்கின்றதற்குப் பிரமவித்தியா பத்திரிகைதா னிருக்கிற
தென்றும், அதிலும் தமதுகக்ஷியைப் பலவிதமாய் மறுத்துவருகிறதெ
ன்றும, அதற்குப் பதில்சொல்லச் சுருதி யுக்தி அநுபவங்க ளில்லை
யென்றும் தெரிந்துகொண்டுதான் 'ப்ரம்மவித்தியாவை யெதிரிட்டு
மறுத்தற் றொழிலை மறந்தொழிந்தோம்' எனத் தந்திரமாய்க் கூறினார்
போலும். தூத்துக்குடிக்குப் பத்திரமெழுதிக்கொடுக்கும்போதே ப்ர
ம்மவித்தியாவில் மறுப்பு வருமென்று தெரியும். தெரிந்துதான், 'ப்ர
ம்மவித்யாவை யெதிரிட்டு மறுத்தற்றொழிலை மறந்தொழிந்தோம்'
எனக் கூறிவிட்டமையால், மறுப்புவந்தாலும் மகாராஜா அவர்கள்
வாக்கைப் பிரமாணமாகக்காட்டி, மறுப்பதில்லையென்ற சொல்லைச்
சாக்காகக்கொண்டு சும்மாவிருந்து விடுவோம், சமயத்தில் வெற்றித்
துவஜத்தையுந் தூக்கிவிடலாம் என்று மேற்படிப் பத்திர மெழுதிக்
கொடுத்தார்போலும்! எந்தச்சமயத்தில் வாதத்திற் பிரவேசிப்பதில்லை
யென்றா ரென்னின், இவர் சபாபதிநாவலர்க்காகப் பரிந்துவந்து எழு
தியகாலத்தில் அதற்காகச் சங்கராசாரியார் அவதாரமகிமை, சித்தா
ந்திகளும் ஏகாத்தும வாதிகளே, வேதாந்தசங்கை நிவாரணம், பதிபசு
பாசவாதம், துவிதசைவரே மாயாவாதிகள் முதலிய பலத்தவா
தங்கள் மேன்மேலும் வந்துகொண்டிருக்கும்போ தென்க. ஷை வாத
ங்களுக்குப் பதிலசொல்லத் தம்மாலாகாதென்று நன்றாயுணர்ந்தே,
அவ்விதச்சாக்கைச் சொல்லி மறைந்தாரென்பது திண்ணம். மகா
ராஜா அவர்கள் வாதஞ்செய்ய வேண்டாமென்று சொல்லியதற்கு
ஒரு காரணஞ்சொல்லி அதற்கு உபமான மொன்றுசொன்னதாகவுஞ்
சொல்லுகிறார். அவ்வுபமானம யாதெனின் "தன்வீட்டி னுழைந்த
கள்வனைக் கம்புகொண்டடித்து வெளியே துரத்தியபின்னர்க் கம்பை
யெறிந்துவிட வேண்டியதுபோல" என்பது. இந்தவுபமான முபமே
யத்துக்கு விரோதிக்கிறது. இந்து, ஆரியன், அத்வைதசித்தாந்தி, மகா
சைவர்முதலிய வாதிகளுக்கு இவர் ஒருபதிலும் சொல்லவில்லை. அவர்
கள் கம்புகளையெடுத்துக் கொண்டுவந்து மேலுமேலுஞ் சில அடி
கொடுக்கும்போதே, இவர்பயந்து உள்ளேபுகுந்து கதவைச் சாத்திக்

கொண்டு வெளியில் வராமலிருந்தார். இப்படியிருக்க எதிரிகளைக் கம்பு கொண்டடித்து வெளியே துரத்தியதாக எங்ஙனஞ் சொல்லலாம்? அன்று உள்ளே புகுந்த இவர், இன்றும் தலைகாட்டாது உள்ளேயே பதுங்கி யிருப்பது கண்கூடாயிருக்க, அதற்குமாறிப்பேசுவது உண்மை யாமா?

இப்படி யெழுதுவது தோல்வியாகவும், அவமானமாகவும் பரிகாசமாகவு முடியுமென்று சோமசுந்தர நாயகருக்குத் தெரியும். அது பற்றியே முன் சாக்கிரதையாக "இனி நமது சாஸ்திரியாரும், அவரினத்தாரும யாம் பின்னிட்டதாகப் பேசி மகிழலாம்." என்கிறார். அதனுடனே "அது எமக்கு ஒரு பொருட்டன்று" என்றுங் கூறுகிறார். இவர் தோல்வியையும் அவமானத்தையும் பரிகாசத்தையும் ஒரு பொருளாக மதிப்பவ ரல்லரென இவரே சொல்லிக் கொள்வதால், இதுவிஷயமாக யாம் ஏதும் பேசவேண்டிய ஆவசியகமில்லை.

இன்னும் பாக்கியுள்ள விஷயத்தையும விசாரிப்பாம். மகாராஜா அவர்கள் இவரை யெவ்வகையிலும் வாதத்திற் பிரவேசிக்கவே வேண்டாமென்று சொன்னாரா? வேறுபெயர் அதாவது அரக்கோணவாசி முதலிய பெயர் போட்டுக்கொண்டு வாதஞ்செய்யலாமென்று சொன்னாரா? இவரெழுதிய வாக்கியத்தில் அத்தப்பேத மொன்றையுங் காணோம். அதனால் மொத்தத்திற்கே வாதஞ்செய்யவேண்டாமென்று சொன்னதாய்த்தான் ஏற்படுகின்றது. அங்ஙனமாயின் இவர்க்குச் சார்பாய் எழுதவந்த கோயமுத்தூர்ப் புளியேமரைக்கண்டர் என்பவர் விஜயஸூ கார்த்திகைமீ 18உ திராவிடமந்திரியில் அரக்கோணவாசி வீரபத்திரமூர்த்தி யென் றெழுதுபவர் சோமசுந்தர நாயகரெனச் சொல்லவேண்டுவதென்ன? அது எழுதி இருபது மாசங்களாயினவே. இதுகாறும் அவ்வாறெழுதியது பொய்யென்றும் அப்பெயருடையவர் நாமல்லவென்றுஞ் சொன்னாரின்றே. ஆதலால் அப்பெயர்கொண்டு எழுதுபவர் இவரென்றே நம்ப இடந்தருகின்ற தன்றோ? அது உண்மை யாயின் மகாராஜா அவர்கள் சொல்லின்படி இவர் நடந்தாரென்பது ஆகாய தாமரை யல்லவா? 'தன்வீட்டில் நுழைந்த கள்வனைக் கம்பு கொண்டடித்து வெளியே துரத்தியபின்னர்க் கம்பை யெறிந்துவிட வேண்டியது' என மகாராஜா அவர்கள் சொன்னதாய்ச் சொன்னாரன்றோ? இந்த வுபமானத்தால் எதிர்வாதிகள் இவரோடு வாதஞ்செய்து தோல்வியடைந்தார்களென வெளிப்படுகின்றது. இப்படிச் சொன்ன இவரே முடிவுரைகூறிய அதேபத்திரிகையிற்றானே "அவரோடு (ப்ரம்மவித்யா அதிபரோடு) கற்பகோடிகாலம் விவகரித்தாலும் வாதம் ஒரு முடிவுக்கு வராது" என்று கூறுகிறார். இதனால் அதுவரையில் செய்தவாதம் முடிவுக்கு வரவில்லையெனத் தெரிகின்றதன்றோ? இவர் சொற்படி வாதம் முடிவுக்கு வராதிருக்கவும் முடிவுக்கு வந்து, இவர், ப்ரம்மவித்யா அதிபரை வென்றதுபோன்ற வுபமானத்தை மகாராஜா

அவர்கள் சொன்னதாய்ச் சொல்லுவது சோமசுந்தர நாயகருக்கு ஒருபோதுந் தருமமாகாது. இவரோடு ப்ரம்மவித்யா அதிபர் வாதஞ் செய்ததாய்ச் சொல்லுகின்றார். அப்படி வாதஞ்செய்த சங்கதி யெம க்குத் தெரியாது. நாம் ஆதிமுதல் ப்ரமமவித்யாவைப் படித்து வரு கின்றோம். ஷை அதிபர் சபாபதிநாவலரவர்களோடு மாத்திரம் வாதம் புரிந்திருக்கின்றார். அங்ஙனமாக ப்ரம்மவித்யா அதிபரோடு இவர் வாதம் புரிந்ததுபோலவும், அதிலும் நெடுங்காலம் வாதம் புரிந்தது போலவும் சொல்வதென்னோ? வாதமேபுரியாத அவரோடுநெடுங்காலம் வாதம்புரிந்ததாகவும், இவரோடு வாதம்புரிந்த ஓர்இந்து, ஆரியன், மகாசைவர் முதலியவர்களோடு வாதம் புரியாததுபோலவும் எழுது வது நீதியாமா? அதிலும் ஷை 'ஓர்இந்து' முதலியவர்கள் எழுதியதற்கு இதுகாறும் ஒருபதிலும் எழுதவில்லையே. இவரெழுதியதற்கு அவர்கள் பதில் வந்ததேயன்றி, அதன்பேரில் இவரொன்று மெழுதவில்லையே. இனியேனும் சோமசுந்தர நாயகர்இப்படிப்பட்ட சாக்குப்போக்குகள் சொல்லாமல் உண்மையை யொளியாமல் வெளியிடுவாராக.

நியாயவாதி.

---

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலை.

1895.